

என்னை நன்ருக இறைவன் படைத்தனன்
தன்னை நன்ருகத்தமிழ் செய்யுமாறே.

# கந்தபுராண நவநீதம்

ஸ்ரீ காசிவாசி சி. செந்திநாதையர்



யாழ்ப்பாணம்
கூட்டுறவுத் தமிழ் நூற் பதிப்பு விற்பனைக் கழகம்



விலை ரூபா 4-00

யா. கூ. த. நூ. ப. வி. க. வெளியீடு. 4.

உ
கணபதிதுணை
திருச்சிற்றம்பலம்

# கந்தபுராண நவநீதம்

ஸ்ரீ காசிவாசி
சி. செந்திநாதையர்
இயற்றியது.

வெளியீடு:
யாழ்ப்பாணக் கூட்டுறவுத் தமிழ்நூற் பதிப்பு விற்பனைக் கழகம்
411/1, காங்கேசன்துறை வீதி, யாழ்ப்பாணம்.

முதற் பதிப்பு : 1969

1100 படிகள்

பதிப்புரிமை

விலை ரூபா : 4-00

*Published by*
THE JAFFNA CO-OPERATIVE TAMIL BOOKS
PUBLICATION & SALES SOCIETY LTD.
*( Regd. No. J/1538 of 10-11-67)*
411/1, K.K.S. ROAD, — JAFFNA.

அச்சுப்பதிவு : கூட்டுறவு அச்சகம், யாழ்ப்பாணம்

# பொருளடக்கம்

## பதிப்புரை

''என்னை நன்ருக இறைவன் படைத்தனன்
தன்னை நன்ருகத் தமிழ்செய்யுமாறே.''

''ஆறுமுகநாவலரின் ஒருமாணவர் செந்திநாதையர். டாக்டர் உ. வே. சாமிநாதையர் செந்தமிழுக்குச் செய்த பணிபோன்ற பெரும்பணியைச் செந்திநாதையர் சைவ சமயத்துக்குச் செய்திருக்கின்ருர். நாவலர் செய்யும் புராணப் பிரசங்கம், சைவப்பிரசங்கம் என்னும் இவைகளைக்கேட்டு, அதன்மேல் குறிப்பு எழுதிவைத்துவிட்டன்றி உறங்காத விரதம் பூண்டவர் செந்திநாதையர்.''

— (கந்தபுராண கலாசாரம்–பக்கம் 49)

''செந்திநாதையர் அவர்கள் கந்தபுராணத்தைப் பல நூறுதரம் பயின்று, ''கந்தபுராண நவநீதம்'' என்னும் நூலைச்செய்தார். நவநீதம் என்ருல் வெண்ணெய் என்று பொருள். கந்தபுராணமாகிய பாற் சமுத்திரத்தில் திரண்ட– திரட்டிய வெண்ணெய் என்று கருத்துக்கொள்ளலாம்.

— (ஷை பக். 75)

''தமிழ் நாட்டிற்கும், தாம்பிறந்த ஈழநாட்டிற்கும் அந்த மகான் அளப்பில்லாத சேவை செய்திருக்கிருர். மாயாவாத மாருதத்தை ஆசமனஞ் செய்வதற்கு ஐயர் ஓர் ஆதிசேஷ ஞகவே காட்சியளித்திருந்தார். தென்னிந்தியாவிலே நல்ல சாமிப்பிள்ளையவர்கள் சைவசித்தாந்த சாஸ்திரங்களை ஆங்கிலத்தில் பெயர்த்தற்கும், ஆண்டாளம்மையார் சைவசித்தாந்த மழை பொழிதற்கும் நமது ஐயர் உறுதுணையாயிருந்தார். வேதாசலம் அவர்களின் குருவாகிய சோமசுந்தர நாயக்கர் அவர்களின் மாயாவாத கண்டன சண்டமாருதத்திற்கும் ஐயர் ஊன்றுகோலாயிருந்தார். இங்கே மாயாவாத துவம்ச கோளரி திரு. நா. கதிரைவேற்பிள்ளையின் கர்ச்சனைகளுக்கும், சிவஞானபோத திராவிட மாபாடிய வெளிப்பாட்டிற்கும் மகான் செந்திநாதையரே மூலபுருஷர். இந்த நாட்

டிலே இடையிடையே சைவசித்தாந்த சரபமாகிய ஈசான சிவாசாரியர் அவர்கள் சைவமழை பொழிந்து வருகின்றார்கள். இதற்கும் மூலகாரணமாயிருந்தவர் மகான் செந்திநாதையரே.

— (ஷை பக்கம் 77–78)

''இப்போதைய ஆண்மணிகளுக்குச் செந்திநாதையர் என்றொருவர் இருந்தார் என்றால் திகைப்பார்கள்; அப்படி ஒருவரை அறிய அவசியமில்லை. ஆண்மணிகளின் நிலை இதுவானால் பெண்மணிகளின் நிலையைப் பேசுவது வெட்கம்! வருஞ் சந்ததியாரின் நாடி நரம்புகளின் புராணேதிகாச இரத்தத்துக்கு இடமில்லை. ஓர் உத்தம ஆத்மா கரு இருப்பதற்கு ஏற்ற ஓர் உதரம் இனி இல்லை. ஓர் புனித ஆத்மா உடம்பெடுக்க நேர்ந்தால் எப்படிப்பட்ட தந்தை தாயர்களை அது நாடும்? அப்படிப்பட்ட தந்தை தாய் ஆகக்கூடியவர்கள் நம் சமூகத்தில் உண்டா? ஔவையாரிலும், திருவள்ளுவரிலும், பாரதத்திலும், இராமாயணத்திலும் முழுகித் திளைத்துத், திருமுறைகளும் சிவபுராணங்களும் பயிலும் ஆண்களையும், பெண்களையும் நாம் ஆக்கிவைத்திருக்க வேண்டாமா? உலகம் உய்ய ஓர் ஆத்மா கீழ் இறங்குவதெப்படி? இதனை நமது நாடும் தலைவர்களும் சிந்திக்கும் நாள் எந்தநாளோ?''

— (ஷை பக். 83)

இப்பகுதிகள், மதிப்பிற்குரிய பண்டிதமணி சி. கணபதிப்பிள்ளை அவர்களின் ''கந்தபுராண கலாசாரம்'' என்ற கட்டுரைத்தொகுப்பிலிருந்து எடுக்கப்பட்டவை. இத்தொகுப்பிலுள்ள பத்துக் கட்டுரைகளில் நான்கு கட்டுரைகள் மகான் செந்திநாதையரின் கல்வியறிவொழுக்கச் சிறப்புக்களைப் பற்றியும் அவர்கள் எழுதிய நூல்களைப் பற்றியும் ஆராயும் விமர்சனக் கட்டுரைகளாகும்.

இக்கட்டுரைகளைப் படித்த யாழ்ப்பாணக் கூட்டுறவுத் தமிழ்நூற்பதிப்பு விற்பனைக்கழக உறுப்பினர் சிலர், ஐயரவர்களின் நூல்கள் வெளிவரல் வேண்டுமென்று பெரிதும் விரும்பினார்கள்.



அவர்களின் விருப்பத்திற்கிணங்கவே ''கந்தபுராண நவநீதம்'' என்ற இந்த நூல் இப்பொழுது எங்கள் நான்காம் வெளியீடாய் வருகின்றது.

இந்நூலுக்கு, பண்டிதமணியின் நான்கு கட்டுரைகளுமே போதிய முன்னுரையாய் அமையுமெனினும், அவர்கள் தனியே மணியனைய ஓர் அணிந்துரை எழுதி நூலைச் சிறப்பித்துள்ளார். அவர்கள் எமக்களித்துவரும் ஊக்கத்துக்கு நன்றி கூறியமையாது.

இந்நூலை அச்சிடுவதற்கு பழம்பிரதியொன்றைத் தந்து இது வெளிவரவேண்டுமென்று வாழ்த்து வழங்கிய திரு. மா. பீதாம்பரன் அவர்கட்கு எங்கள் நன்றி யுரித்தாகுக.

பிரம்மஸ்ரீ சி. கணேசையர் அவர்கள் எழுதிய ''ஈழநாட்டுத் தமிழ்ப்புலவர் சரித்திர''த்திலிருந்து செந்திநாதையரின் வரலாற்றை இந்நூலில் வெளியிட இசைவு நல்கிய சுன்னாகம் தனலக்குமி புத்தகசாலை அதிபர் திரு. மு. சபாரத்தினமவர்களுக்கு மனமார்ந்த நன்றியுடையோம்.

இந்நூல் அச்சாகுங்கால் அச்சுத்தாள்களை இடையிடையே பார்வையிட்ட பண்டிதமணியவர்கள், இந்நூலுக்கு அநுபந்தங்களாக, ஓர் அரும்பத விளக்கமும், பாட்டு முதற்குறிப்பகராதியும் இருத்தல் வேண்டுமென்று விரும்பினார்கள்.

இவற்றையும், மூலநூலில் ஆங்காங்கே உள்ள பிழைகளாலும் பிறவற்றாலும் இந்நூலில் தவிர்க்கமுடியாது ஏற்பட்ட பிழைகளைக் காட்டும் ''பிழை திருத்த'' அட்டவணை முதலியவற்றையும் தயாரித்துத் தந்தவர் இருமொழிப் பண்டிதரும், புத்தூர் சோமாஸ்கந்தக் கல்லூரியின் ஆசிரியருமாகிய பிரம்மஸ்ரீ ச. பஞ்சாட்சர சர்மா அவர்களாவர். செந்திநாதையர்பாற் கொண்டுள்ள பக்தி, அவரை இங்ஙனம் பெரும் பணிகளில் ஈடுபடச் செய்துள்ளது. அவர்களுக்கு எங்கள் நன்றி உரியது.

இந்நூலைப் படிக்கத் தொடங்குமுன் அநுபந்தத்தில் தரப்பட்டுள்ளபடி முதலில் பிழைகளை திருத்திக்கொள்ளும் படி அன்பர்களைப் பணிவோடு கேட்டுக்கொள்ளுகின்றோம்.

இந்நூலில் முதன்முதலாக எங்கள்கழக இலட்சிய மொழி யைக்கொண்ட கழக இலச்சினை அச்சிடப்படுகின்றது. அதனை வரைந்தும், மகான் செந்திநாதையரின் நிழற்படத்தை அச்சுக்கேற்றவாறு செய்துமுதவிய எம்இனிய நண்பரும் கழக உறுப்பினரும் சிறந்த ஓவியருமாகிய திரு.க. இராசரத்தினம் அவர்கட்கு நாம் என்றென்றைக்கும் கடமைப்பட்டுள் ளோம். அவருக்குக் கழகத்தின் நன்றி என்றென்றைக்கும் உரியது.

இந்நூல் அச்சாகுங்கால் அச்சுத்தாள்களைப் பிழைதிருத் தஞ்செய்த எம்செயலாளர் சைவப்புலவர் திரு. இ. செல்லத் துரை அவர்களும் திரு. க. கனகராஜா அவர்களும் செய்த உதவிகள் மிகப்பலவாகும். அவர்களுக்கும் எங்கள் நன்றி உரியது.

இந்நூலினை இத்துணை வனப்புற அச்சிட்டுத்தந்த யாழ். கூட்டுறவு அச்சக அதிபர், எழுதுவினைஞர், தொழிலாளர் முதலிய அனைவர்க்கும் எல்லாம்வல்ல இறைவனது ஆசீர் வாதங்கள் கிடைப்பதாக.

இந்நூலைச் சைவப்பெருமக்கள் வாங்கிப் படித்துப் பய னடைந்தால் அதுவே நாவலர்பெருமானுக்கும், மகான் ஐயரவர்களுக்கும், பண்டிதமணியவர்களுக்கும் நாம் செய்யும் பெருங் கைம்மாறாகும்.

கச்சியப்ப சிவாசாரிய சுவாமிகள் திருவடி வாழ்க.

411/1, காங்கேசன்துறை வீதி,
யாழ்ப்பாணம்.
23-9-69

சி. சிவகுருநாதன்
தலைவர்,
யாழ். கூட்டுறவு த.நா.ப.வி.கழகம்.

பண்டிதமணி சி. கணபதிப்பிள்ளையவர்கள் வழங்கிய

## அணிந்துரை

நாவலர் அவர்களிடம் சமயபாடங் கேட்டவர்களுள் குறிப்பிடத்தக்கோர் மூவர். ஒருவர் திருவாவடுதுறைச் சுப்பிரமணிய தேசிகருக்குக் கீழே இரண்டாம் பட்டமா யிருந்த நமசிவாய தேசிகர். மற்றொருவர் இணுவில் நடரா சையர். இருவரும் நாவலரிடம் சிவஞானசித்தியார் பாடங் கேட்டவர்கள்.

மூவருள் மூன்றாமவர் காசிவாசி செந்திநாதையர். செந்தி நாதையர் நாவலரது வண்ணைச் சைவப்பிரகாச வித்தியா சாலையில் தலைமையாசிரியராயிருந்து கொண்டு, எட்டுவருட காலம் நாவலரை நிழல்போலத் தொடர்ந்து, நாவலர் செய்யும் சமயப் பிரசங்கங்களைக் குறிப்பெடுத்து எழுதிப் படித்தவர்.

நமது சமயம் வைதிக சைவம். வைதிகம் வேதநெறி. சைவம் சிவநெறி. அது அருள்நெறி; ஆகமநெறி. வைதிகம் சைவத்தில் முற்றாதவழி அவைதிகம்; சைவம் வைதிகத்தின் வழி வாராத வழி அசைவம்.

வடக்கே வைதிக சைவம், வைதிகமும் சைவமுமென இருவேறு சமயமாய்ப் பிறழ்ந்து நடப்பதைச் செந்திநா தையர் கண்டார்.

சைவமடங்கள், வேத வேதாந்தங்களைப் புறஞ்செய்து, வேதத்தை வகுத்த – வேதாந்த சூத்திரம் செய்த – பதி னெண் புராணங்கள் தந்த - வியாச முனிவரையே புறக் கணிப்புச் செய்தன. வைதிக மடங்கள், சிவாகமங்களையும், வேதசிவாகம நெறி பேணிய தமிழ்த் திருமுறைகளையும், சிவ ஞானபோதம் முதலிய சாஸ்திரங்களையும் பராமுகஞ் செய் தன. இந்த அறியாமைக் கொடுமைகளை ஒரு செந்திநாதைய ரால் பொறுக்க முடியவில்லை. சைவ வேதாந்தம், தேவாரம் வேதசாரம், பிரமசூத்திரத்துக்கு நீலகண்டர் செய்த பாஷிய

மொழிபெயர்ப்பு, சிவஞானபோத வசனாலங்கார தீபம் முதலிய அருமந்த நூல்கள் மேற்காட்டிய கொடுமைகளைப் போக்கும் பொருட்டே ஐயரவர்களால் வெளிப்படுத்தப் பட்டவை.

ஐயர் அவர்கள் நாவலர் வழிநின்று கண்ட உண்மைகள்,

"வேதமுட னாகம புராணமிதி காசமுதல்
வேறுமுள கலைகளெல்லாம்
மிக்காக அத்துவித துவிதமார்க் கத்தையே
விரிவா எடுத்துரைக்கும்
ஓதரிய துவிதமே அத்துவித ஞானத்தை
உண்டுபண்ணும் ஞானமாகும்
ஊகம் அநுபவம் வசனம் மூன்றுக்கும் ஒவ்வும்"

என முன்னமே தாயுமான சுவாமிகளாற் பேசப்பட்டவை.

தாயுமானவருக்கு முன், வைதிக சைவ உண்மையைத் தெட்டத்தெளிய வெளிப்படுத்தியருளியவர் கச்சியப்பசிவாசாரிய சுவாமிகள். சுவாமிகள் அருளிய கந்தபுராணத்தை, 'அத்தியற்புத அதிமதுர சுத்தச் செந்தமிழ்' என்கின்றார் ஆறுமுகநாவலர். கந்தபுராணத்தில்,

"ஏத்திடு சுருதிக ளிசைக்கு மாண்பொருள்
மாத்திரைப் படாவெனா மாசில் காட்சியர்
பார்த்துணர் பான்மையிற் பலவ கைப்படச்
சூத்திர மானவுஞ் சொற்று வைகினான்"

என வியாசமுனிவரும், அவர் செய்த பிரயசூத்திரமாகிய வேதாந்தமும் போற்றப்படுவதும்,

"வேதக் காட்சிக்கும் உபநிடத் துச்சியில் விரித்த
போதக் காட்சிக்குங் காணலன்"

"சுத்த வாதுளம் முதலிய தந்திரத் தொகுதி
உய்த்துணர்ந்திடு நீரரே ஒரு சிறிதுணர்வார்"

எனச் சுப்பிரமணியப் பிரபாவம் பேசும் இடங்களும் ஆழ்ந்த சிந்தனைக்குரியவை. தந்திரம் - ஆகமம்.



கந்தபுராணம் தோன்றிப் பன்னூறு வருடங்களாகியும், அதனை மடங்கள் பேணும் முறையிற் பேணாமை, பொருணூலின் அருமை தெரியாமையேயாம். தெரியாமைக்குக் காரணம்,

"முந்தொரு காலத்தின் மூவுல கந்தன்னில்
வந்திடு முயிர்செய்த வல்வினை யதனாலே
அந்தமில் மறையெல்லா மடிதலை தடுமாறிச்
சிந்திட முனிவோருந் தேவரு மருளுற்றார்"

என்ற கந்தபுராணத்துப் பாயிரப் பாடல்கொண்டு சிந்திக்கத் தக்கது.

கந்தபுராணத்தின் அருமையை அறிந்து அதனை உச்சி மேற்கொள்ளவைத்தவர் ஆறுமுகநாவலர் பெருமான். கந்தபுராணம் பாற்சமுத்திரம். ஐயர் அவர்கள், தம் அறிவாகிய மந்தரமலையை நாட்டிக் கந்தபுராண சமுத்திரத்தைக் கடைந்து நவநீதமாகிய அமிர்தத்தைத் திரட்டி நமக்கு நல்கியிருக்கின்றார்கள். நவநீதம் - வெண்ணெய்.

கந்தபுராண நவநீதம், கிடைப்பதற் கரிதாயபோது யாழ்ப்பாணக் கூட்டுறவுத் தமிழ் நூற்பதிப்பு விற்பனைக் கழகம் இரண்டாவது பதிப்புச்செய்து உபகரித்திருப்பது பெறற்கரியதொரு பேறேயாம்.

அரியநூல்களைப் பதித்து வெளியிட வேண்டும் என்கின்ற ஆர்வம், கழகத்தலைவர் திரு. சி. சிவகுருநாதன் எம். ஏ. அவர்கள்பாற் குடிகொண்டிருப்பது பாராட்டியமையாது.

கலாசாலை வீதி,
திருநெல்வேலி,
யாழ்ப்பாணம்.
8-8-1969

சி. க.



ஸ்ரீ காசிவாசி செந்திநாதையர்

# ஸ்ரீ காசிவாசி செந்திநாதையர்

மகாவித்துவான் பிரம்மஸ்ரீ சி. கணேசையர் எழுதியது

இவர் ஏழாலையென்னுமூரிலே கிறீஸ்தாப்தம் 1848-க்குச் சமமான கீலகவருடம் ஐப்பசிமாதம் 2-ந் தேதியில் சிந்நயஐயர் என்பவருக்குப் புதல்வராகப் பிறந்தார். பிறந்து ஐந்தாம் வயசிலே வித்தியாரம்பஞ் செய்யப்பெற்றுப் புன்னாலைக்கட்டுவனில் தமது மாமனாராய் விளங்கிய கதிர்காமையர் என்பவரிடம் தமிழுஞ் சம்ஸ்கிருதமும் கற்று வந்தார். இளமையிலேயே அன்பு, அருள், வாய்மை முதலிய நற்குணங்களெல்லாம் இவரிடத்து அமைந்து விளங்கின. இவர் தமது பத்தாம் வயதில் யாழ்ப்பாணத்து மத்திய கல்லூரியிலே சென்றுசேர்ந்து ஆங்கிலக்கல்வி கற்று வந்தனர். இருபதாம் வயசிலே ஆங்கிலங்கற்றலை விடுத்து நல்லூர்ச் சம்பந்தப்புலவரிடஞ் சென்று அவரிடந் தமிழ் இலக்கிய இலக்கணங்களைக் கற்று அவற்றில் வல்லவரானர். கி. பி. 1871-ம் ஆண்டிலே தந்தையாரோடு இந்தியாவுக்குச் சென்றுசிதம்பரம் முதலிய தலங்களைத் தரிசித்து மீண்டனர். பின்னர் 1872-ம் ஆண்டிலே வண்ணார்பண்ணையில் ஆறுமுக நாவலரவர்களால் தாபிக்கப்பட்ட சைவ வித்தியாசாலையிலே ஆறுவருடமும், அவருடைய ஆங்கில வித்தியாசாலையில் ஒருவருடமும் ஆசிரியராகவிருந்து கற்பித்தனர். அக்காலத்தில் நாவலருடைய சமயப்பிரசங்கங்களை இவர் தவருது கேட்டுவந்தார். நாவலர் எழுதிய ''விவிலிய குற்சிதம்'' என்னும் நூலையும் இவரே யச்சிட்டு வெளிப்படுத்தினர்.

இவர் வண்ணார்பண்ணை வாசரும் சைவசித்தாந்தத் துறையில் வல்லுநருமாகிய விசுவநாதையர் என்பவருக்குப் புதல்வியும், சோதிட சாஸ்திர வல்லுநராகிய சபாபதி ஐயருக்குச் சகோதரியுமாகிய சிவகாமியம்மையாரை விவாகஞ்செய்து மீனுட்சியம்மையென்னும் ஒரு புதல்வியைப் பெற்றுர். சிலவாண்டு கழித்து இவருடைய மனைவியார் தேகவியோகமடைந்தனர். 1878-ம் வருடத்திலே இவர் நாவலர் வித்தியாசாலையைவிடுத்து இந்தியாவுக்குச் சென்றுர்.

இவர் இந்தியாவுக்குச் சென்று மலையாளத்தின் தலைநகராகிய திருவனந்தபுரத்திலே பிரதம நீதிஸ்தல நீதிபதியாய் விளங்கிய ஸ்ரீமான் தா. செல்லப்பாபிள்ளை என்பவரது உதவியாலும், ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர் எழுதி அனுப்பிய நன்னடக்கைப் பத்திர உதவியாலும், அங்குள்ள சுப்பா சாஸ்திரியாரிடத்தும், அரண்மனைச் சம்ஸ்கிருத பரீட்சாதிகாரிகளுள் ஒருவராகிய பிரஹ்மஸ்ரீ அனந்தகிருஷ்ண சாஸ்திரியாரிடத்தும் காவியம் தர்க்கம் வியாகரணம் முதலிய வடமொழிக் கருவிநூல்களைக் கற்று வந்தார். நாவலரெழுதிய நன்னடக்கைப்பத்திரம் வருமாறு:-

ம-ா-ா ஸ்ரீ சி. செந்திநாதையரை யான் ஏழுவருடகாலம் அறிவேன். ஆறுவருடம் என்னுடைய தமிழ் வித்தியாசாலையிலும், ஒருவருடம் என்னுடைய இங்கிலீஷ் வித்தியாசாலையிலும் உதவி உபாத்தியாயராக இருந்து தமது கடமையைச் ஜாக்கிரதையோடு பிறழாமல் நடத்திக்கொண்டு வந்தவர். ஒழிவுள்ள பிறநேரங்களிலே நான் பொதுநன்மையின் பொருட்டு எடுத்துக்கொண்ட பிறகருமங்களையும் நிறைவேற்றினவர்.

இங்ஙனம்,

யாழ்ப்பாணம், **க. ஆறுமுகநாவலர்.**
1879-ம் ஸு புரட்டாதி மீ 19 உ

இவர் திருவனந்தபுரத்திலேயிருந்து கற்றுவருங் காலத்திலே நாவலர் தேகவியோகமடைந்தார். அவர்பிரிவைக் குறித்து இவர் பல இரங்கற் பாக்களைப் பாடியுள்ளார். இவர் பாடிய பாக்களுட் சில பின்வருவன:

### வெண்பா

வன்றெண்டன் நாவலர்கோன் வாழ்வா வதுமாய
மென்றுரைத்த தேவாரத் தின்பொருளை — நன்றியுடன்
சிந்தைசெய்தேன் நாவலனே செத்தாய்நீ யென்பதறு
புத்திநொந்து போதமிக்க போது.

நன்னடக்கைப் பத்திரிகை நாவலனே நீயனுப்ப
என்னதவஞ் செய்தேனோ யானறியேன் — அன்னதனு
ளுள்ளசில வாசகங்க ளுற்றுணரும் போதெல்லாம்
வெள்ளம் பொழியும் விழி.



### கட்டளைக் கலித்துறை

தேவாரம் யான்சொலக் கேட்டுமகிழ்ந்து சிரத்தையுடன்
பூவாதி கொண்டு புரிசிவ பூசைப் பொலிவழகும்
பாவாணர் மெச்சச் செயும்பிர சங்கமும் பார்த்தினிநான்
நாவார வாழ்த்திடு நாளுமுண் டோநல்லை நாவலனே.

பின்னர்த் தந்தையாரின் அழைப்புக்கிணங்கித் திருச்செந்தூர் பழனி ஆகிய தலங்களைத் தரிசித்துக்கொண்டு யாழ்ப்பாணம் வந்தார். பின்பு இவர் கொழும்பு ஸ்ரீமான் தம்பையா முதலியாருடைய வேண்டுகோளுக்கிணங்கிக் கொழும்புசென்று அவருடைய தருமசத்திரத்திலே 1880-ம் ஆண்டு தைமாதந் தொடக்கம் ஆறுமாசகாலம் வரையும் வைதிக சைவசித்தாந்த பரமாக உபந்நியாசங்கள் செய்து வந்தார். பின்னர் அங்குநின்றுங் கதிர்காமயாத்திரை செய்தார். அங்கேயிருந்து உபவாசத்தோடு கந்தபுராணத்தைப் பன்னிருதினத்துட் படித்து முடித்து யாழ்ப்பாணம் வந்தார். பின் 1882-ம் ஆண்டு மறுபடியும் இந்தியாவுக்குச் சென்று திருநெல்வேலியில் உள்ள சைவ வித்தியாசாலை யொன்றில் ஆசிரியராய் அமர்ந்து சமயபாடத்தோடு இலக்கிய இலக்கண பாடங்களையுங் கற்பித்து வந்தார். 1883-ம் ஆண்டு திருநெல்வேலியிலுள்ள முனிசீப், திருவாளர் சுப்பிரமணிய பிள்ளையால் நடத்தப்பெற்றுவந்த ''சுஜனமநோரஞ்சனி'' என்னும் பத்திரிகைக்கு உதவிப் பத்திரிகாசிரியராகவிருந்து உதவிபுரிந்துவந்தார். அக்காலத்தில் சாத்தூர் உதவிப் பதிவுக் காரியஸதராகிய சாமுவேல் சற்குணர் என்பவர், ''சாணுரெல்லாஞ் க்ஷத்திரியர்'' என்னுங் கருத்தினோடு ஒரு புத்தகத்தை யெழுதி யச்சிட்டு வெளியிட்டனர். அதுகண்ட கிறிஸ்தவர்கள் இவரை அப்புத்தகத்திற்கு மறுப்பு எழுதித் தரும்படி வேண்ட இவர், ''சாண் க்ஷத்திரியப் பிரசண்டமாருதம்'' என்னும் புத்தகத்தை யெழுதிக்கொடுத்து வெளியிடுவித்தார். இதைக்கண்டு சற்குணரும் பிறரும் இவர்மீது ''அவதூற்றுப் பத்திரிகை'' ஒன்றை எழுதி வெளியிட்டார்கள். அதனைக் கண்ணுற்ற இவர் அந்தச்சாணுர்கள்மீது

வழக்குத் தொடுத்தார். விசாரணையில் சாணுர்கள் குற்றமுடையவராகக் காணப்பட்டுத் தண்டிக்கப்பட்டார்கள்.

இவர் ஒருமுறை திருநெல்வேலியிலுள்ள திருஞானசம்பந்தமூர்த்தி நாயனுரது ஆலயத்திலே ''ஞானத்தின் திருவுருவை'' என்னும் முதலையுடைய பெரியபுராணத்திருவிருத்தத்தைப் பீடிகையாகக்கொண்டு ஓர் உபந்நியாசஞ் செய்தார். அது ''சுஜனமநோரஞ்சனி'' என்னும் பத்திரிகையில் பிரசுரிக்கப்பட்டது இதனைக்கண்டு மகிழ்ந்த கோயமுத்தூர்ச் சைவசித்தாந்த சபை அக்கிராசனராகிய திருச்சிற்றம்பலப் பிள்ளை என்பவர் இவரை ஆங்கு வரும்படி விரும்பிக்கேட்டார். இவருமதற்கியைந்து அவ்வாண்டு ஆவணிமாதத்திற் புறப்பட்டு மேலைச்சிதம்பரம் எனப்படுந் திருப்பேரூரையடைந்து ''உலகெலாமுணர்ந் தோதற்கரியவன்'' என்று தொடங்கும் பெரியபுராணக் காப்புச்செய்யுளையும் ''அளவாயளவதனளவாய்'' என்று தொடங்கும் பேரூர்ப் புராணத் திருச்செய்யுளையும் பீடிகையாகக்கொண்டு பேரூரைச்சார்ந்த கோயமுத்தூர்ச் சைவசித்தாந்த சபையிலே ஓர் உபந்நியாசஞ்செய்தார். பின்னர் கலியாணசுந்தரம்பிள்ளை யென்பவரது அழைப்புக்கிணங்கி உடுமலைப் பேட்டைக்குச் சென்று அங்கு சில வைதிகசைவ உபந்நியாசங்கள் செய்தார். அப்பாற் காசிக்குச்சென்று சிவாலய தரிசனஞ்செய்துகொண்டு அணித்தாகவுள்ள ''சிக்கலூர்'' என்னுமிடத்தையடைந்து அங்குள்ள ஐரோப்பிய வைத்தியசாலையில் ''பண்டிற்'' என்னும் மாசிக சஞ்சிகையில் அச்சிடப்பெற்ற ஸ்ரீ நீலகண்ட பாஷியத்தைப் பெற்றுக்கொண்டு பின்னர்த் தமது ஜெனன நாடாகிய யாழ்ப்பாணத்துக்கு மீண்டனர்.

பின்பு 1886-ம் ஆண்டில் ''கந்தபுராண நவநீதம்'' என்னும் நூலை எழுதி முடித்து, கொழும்பிலிருந்த சேர் அருணுசலந்துரை முதலிய பிரபுக்களின் பேருதவி பெற்றுச் சென்னைக்குச் சென்று அதனை அச்சிடுவித்துக்கொண்டு மீண்டார். இக்காலந்தொடங்கி இவருடைய இளைய சகோதரராகிய சிவசம்புநாதையர் என்பவர் இவரோடு வசித்து வந்தார்.



1887-ம் ஆண்டிலே வைதிக சுத்தாத்துவித சைவ சித்தாந்தத்தில் வல்லுநராகிய இணுவில் பிரஹ்மஸ்ரீ நடராசையர் என்பவரிடத்திலே சென்று சிவஞானசித்தியாரை அதனுரைகளுளொன்ருகிய ஞானப்பிரகாசருரையோடும் பாடங்கேட்டுவந்தார். கேட்டபின் மீளவுஞ் சென்னைக்குச் சென்று அங்கு வசித்தார். அங்கிருந்தபோது பெரியபுராணத்திலுள்ள ''சிவனடியே சிந்திக்கும்'' என்று தொடங்கும் செய்யுட்கு ஒருவர் கூறிய பொருளைக் கண்டித்து உண்மைப் பொருள் இதுவாமென்றுணர ''ஞானபோத விளக்கச் சூருவளி'' என்னும் நூலினை எழுதி வெளியிட்டார். பின்னர் சேலம் ஜில்லாவைச் சேர்ந்த திருப்பற்றூருக்குச் சென்று அங்கிருந்து ''அமிர்தபோதினி'' எனப் பெயரிய வாரவெளியீடொன்றை 1888-ம் ஆண்டில் ஆரம்பித்துச் சிலகாலம் நடாத்திவந்தார். அக்காலத்திலே சென்னையிலுள்ள கிறிஸ்தவருட் சிலர் ''சிவனுந் தேவனு'' என்னுந் தலைநாமத்தைக் கொண்ட துண்டுப் பிரசுரமொன்றை வெளியிட்டனர். இதனைக் கண்ணுற்ற, சென்னைக் காசிச் செட்டியாரது வீதியிலேயுள்ள 'இந்து லகுலேக' சங்கத்தின் தலைவராகிய சை. இரத்தினச்செட்டியார் என்பவர் இவரை ஒரு கண்டனம் எழுதித் தரும்படி கேட்டார். அதற்கிணங்கிச் ''சிவனுந் தேவனு என்னுந் தீயநாவுக்கு ஆப்பு'' எனப்பெயர் கொடுத்து ஒரு நூலை யெழுதிக் கொடுத்தார். இதுவும், ''வஜ்ரடங்கம்'' என்னும் வேறொரு நூலும் ''கிறிஸ்துமத கானன குடாரி'' என்னும் பெயரினோடு அச்சங்கத்தாரால் அச்சிடப்பெற்று வெளிவந்தன. பின் அச்சங்கத்தினர் இவரையழைத்து ஓர் உபந்நியாசஞ் செய்வித்தனர். அப்பொழுது சிதம்பரம் ''பிரஹ்ம வித்தியா'' பத்திராதிபரும் பல பண்டிதர்களும் கூடியிருந்தனர். இவருக்கு அச்சங்கத்தின் உறுப்பினர் ஒருவரால் ''கிறிஸ்துமத கானன குடாரி'' என்னும் பட்டம் அளிக்கப்பட்டது. இன்னும் திருமங்கலக்குடிச் சூரியனர் கோயில் அதி வருணுச்சிரம ஆசாரிய வரிய சைவசமய பரிபாலக ஸ்ரீ சிவாக்கிர யோகீந்திர ஞான சிவாசாரிய சுவாமிக

ளாதீனத்து ஸ்ரீலஸ்ரீ முத்துக்குமார தேசிகர் என்பவர் இவருக்கு எழுதி விடுத்த கடிதத்திற் கண்ட,

''நிறைகல்வி தவவொழுக்கஞ் சான்ருண்மை கண்ணேட்ட
நெடுகு மன்பு
பொறைமேன்மைச் சிவஞான முதிர்ச்சியநு பூதிமுதற்
குணங்க ளெல்லாம்
குறையாம னிறைசெந்தி நாதமறை யோய்நின்னைக்
குறித்தியா மிட்ட
மறைவாய்மைச் சித்தாந்த சிகாமணியாம் பெயர்பிறர்க்கு
வழங்க லாமோ.''

என்னுஞ் செய்யுளால் இவருக்குச் ''சித்தாந்த சிகாமணி'' என்னும் பட்டத்தை முத்துக்குமாரதேசிகர் என்பவர் அளித்துள்ளார் என்பது தெரிகிறது.

இன்னும் 1888-ம் ஆண்டில் ''ஞானரத்நாவளி'' என்னும் ஒரு நூலை எழுதி இவர் வெளியிட்டார். அக்காலத்துச் சந்நியாசி ஒருவர் சென்னைத் தங்கசாலைத்தெருவில் ''சூத சம்ஹிதாப்'' பிரசங்கஞ் செய்துவந்தார். அவர் பிரசங்கஞ் செய்யும்போது அறுபத்து மூன்று நாயன்மார்களுட் சிலரைத் தூஷித்து வந்தார். இதனையறிந்த இவர் ''வீரபத்திராஸ்திரம்'' என்னும் ஒரு நூலையெழுதி, அச்சந்நியாசியாரது போலி நியாயங்களைத் தகர்த்தார் பின் திருவாளர்கள்; கு. ஸ்ரீநிவாச சாஸ்திரியார், சை. இரத்தினச்செட்டியார், 'விஜயத்துவச' பத்திராதிபர் முதலிய பெரியார்களது கருத்துக் கிசைந்து ''விவிலிய குற்சித கண்டன திக்காரம்'' என்னும் நூலையெழுதி யச்சிட்டு வெளியிட்டார். இது ஆறுமுக நாவலர் எழுதிய விவிலிய குற்சிதத்துக்குக் கிறிஸ்தவரால் எழுதப்பெற்ற மறுப்புக்கு மறுப்பாக அமைந்தது.

இவர் 1888-ம் ஆண்டு தொடங்கி 1898-ம் ஆண்டுவரையும் காசியிலே வசித்துவந்தார். அதனுல் இவர் காசிவாசி செந்திநாதையர் எனவும் அழைக்கப்படுவர். அங்கு வசிக்கும் காலத்திலே சிதம்பரம் ''பிரஹ்மவித்தியா'' முதலிய பத்திரிகைகளிலே வைதிக சைவ சித்தாந்தத்துக்கு மாருக வெளிப்போந்த பல விஷயங்களைக் கண்டித்து எழுதிய



விஷயங்களை ''இந்துசாதனம்'', ''விவேக திவாகரன்'', ''நாகை நீலலோசனி'', ''விஜயத் துவஜம்'', ''வெற்றிக் கொடியோன்'' முதலிய பத்திரிகைகளிலே வெளிப்படுத்தி வந்தார். இவர் 'இந்துசாதன'ப் பத்திரிகையில் வெளிப்படுத்திய''வைதிக சுத்தாத்துவித சைவசித்தாந்தசமயம்''என்னும் விஷயத்தைக் குறித்த கட்டுரைகளைத் தொகுத்து யாழ்ப்பாணத்து நல்லூர் ஸ்ரீலஸ்ரீ த. கைலாசபிள்ளை யவர்கள் செந்திநாதயோகிகளால் இயற்றப்பெற்றன என்னும் முகவுரையோடு ஏவிளம்பி வருடம் சித்திரை மாசம் அச்சிட்டு வெளியிட்டுள்ளார்கள்.

1898-ம் ஆண்டிலே இவர் காசியைவிட்டுச் சென்னைக்கு அணித்தாகவுள்ள திருவொற்றியூரையடைந்து அங்குச் சில காலம் வசித்தபின் அங்குள்ள பழவேற்காடு என்னும் சிற்றூரிற் சென்று அங்கு வசித்தனர். அப்போது திருவாளர் சோமசுந்தரநாயகர் என்பவரது விருப்பப்படி சென்னையிலுள்ள ஏகாம்பரேஸ்வரர் சந்நிதானத்திலே ஓர் உபந்நியாசம் செய்தார்.

மேலும் இவர் அங்கிருக்குங் காலத்திலே, சிந்தாதிரிப்பேட்டையிலுள்ள அறிஞர் சிலரால் கூட்டப்பெற்ற சபைக்கு இவர் அக்கிராசனராயும் யாழ்ப்பாணத்து மேலைப்புலோலி நா கதிரைவேற்பிள்ளை சிறந்த உபந்நியாசகராயும் இருந்தார்கள். ஒருநாள் மாயாவாதத்தை நிராகரித்து கதிரைவேற்பிள்ளை அவர்கள் செய்த பிரசங்கத்தைக்கேட்ட சபையோர் அவருக்கு 'மாயாவாத துவம்ச கோளரி' என்னும் பட்டப் பெயரை இவரால் அளிப்பித்தார்கள்.

பின்னர் இவர் 1901-ம் ஆண்டு பாண்டிநாட்டிலுள்ள சிவஸ்தலங்களையும் குகஸ்தலங்களையும் தரிசித்துக்கொண்டு அமராவதி புத்தூரின் கண்ணே வசிப்பவரும் மதுரைமீனுட்சியம்மை கோயிலின் தேவஸ்தானசபை அங்கத்தவருள் ஒருவருமாகிய திருவாளர் வயி. நாக. ராம. இராமநாதச் செட்டியார் என்பவர் விரும்பிய பிரகாரம் மதுரையம்மை குருபூஜா மடத்திலே வசித்து வந்தார். அப்பொழுது

மதுரையிலுள்ள ''பிரஹ்ம ஞான சபா'' மண்டபத்திலே திருவாளர் திரவியம்பிள்ளை என்பவர் வேண்டிக்கொண்டபடி ஓர் உபந்நியாசம் செய்தார். 1902-ம் ஆண்டில் சுப்பிரமணியப் பெருமான் எழுந்தருளியிருக்கும் ஸ்தலமாகிய திருப்பரங்குன்றத்துச் சந்நிதி வீதியிலுள்ள மயில் மண்டபத்துக்குக் கீழ்ப்புறத்திலே ஒரு வித்தியாசாலையைத் தாபித்து அதற்கு ''வைதிக சுத்தாத்துவித சைவ சித்தாந்த வித்தியாசாலை'' எனப் பெயர்சூட்டி அதில் மாணுக்கர்களுக்கு சம்ஸ்கிருதந் தமிழ் ஆங்கிலம் ஆகிய பாஷைகளிலுள்ள நூல்களைக் கற்பித்துக்கொண்டு வந்தார்.

பாலவனத்தஞ் ஜமிந்தாரும் நான்காவது தமிழ்ச் சங்கஸ்தாபகருமாகிய ஸ்ரீமான் பாண்டித்துரைத் தேவர் விரும்பிய வண்ணம் 'செந்தமிழ்' என்னும் பத்திரிகைக்குத் 'திருப்பாசுரம்'; 'உள்ளது', 'திருச்சிற்றம்பலம்', 'கடவுள்' என்னும் தலையங்கங்களோடு கூடிய விஷயங்களை எழுதி உதவினுர். இவ்விஷயங்கள் 'செந்தமிழ்' முதலாந் தொகுதியிலும், இரண்டாந் தொகுதியிலும் வெளிவந்துள்ளன. மதுரைத் தமிழ்ச்சங்கத்தார்''ஞானுமிர்தம்'' என்னும் நூலைத்திருத்தி அச்சிட்டபோது இவரும் அவர்க்குவேண்டிய உதவிபுரிந்தனர்.

''வைதிக சுத்தாத்துவித சைவ சித்தாந்தப்படம்''எனப் பெயரிய பிரணவப் படமும் இவரால் 1904-ம் ஆண்டிலே அச்சிட்டு வெளியிடப்பட்டது. கருங்குழி இராமலிங்கபிள்ளையின் பாடல் காரணமாகப் புலோலிக் கதிரைவேற்பிள்ளைக்கும் அச்சென்னையிலுள்ளார் சிலருக்கும் சென்னைப் பிரதம நீதிஸ்தலத்தில் ஒரு வழக்கு நடைபெற்றது. அவ்வழக்கிற் சாட்சி பகர்ந்தவர்களில் இவரும் ஒருவர். வழக்கு முடிந்த பின்னர் பிள்ளையவர்கள் இவருக்கு எழுதி விடுத்த கடித சாரமும் பாக்களும் வருமாறு:

''நீதிபதி முதற் பலரும் வியப்புறச் சுவாமிகள் எழுந்தருளித் திருவாய் மலர்ந்தருளிய வாக்கன்றே எமக்கு இப்பெருஞ் செயத்தை உண்டாக்கிற்று! இஃது எல்லாரும் அறிந்ததொன்றே. சுவாமிகள் பரங்குன்று நோக்கி என்னைப்



பார்த்து ''நின் வழக்கு நினக்குச் செயமாகவே முடியும்; அங்ஙனமின்றி மாறுபட வரின் நீறுகண்டிகை வேல்மயில் என்பவற்றை வேண்டிலன்'' என அன்பால் நைந்து அருளிய ஆசிமந்திரம் என் மனத்தை விட்டகலாது. இத்துணை அன்பும் ஆர்வமும் உளவேல் எமக்கு அபஜெயமும் எய்துவதாமோ?

''செந்தூர்நங் குகக்கடவுள் போலெனக்குத் தலைக்கருணை
செய்வோய் நாளும்
நந்தூருங் கரத்தார்க்கு மறிவரிய பரம்பரன்ற
னலத்த ஞானம்
வந்தூரு மெய்யுளத்த வடமொழியுந் தென்மொழியும்
வரம்பே கண்ட
நந்தோமின் மெய்ப்புலவ சித்தாந்த பாநுவென
நவில நின்றோய்.

அன்பதுவே யுறுப்பாக வருட்குழாம் வடிவாக
வழகே வாய்ந்த
இன்பதுவே குணனுக வியைசிவமே யுணர்வாக
வெழிற்சித் தாந்தம்
என்பதுவே கலனுக விதை ரித்த ரெழிலாக
விளங்குஞ் செந்தி
முன்பதுவா நாதப்பேர் நாவலசற் குருமணியே
முறையைக் கேட்டீ.

என்னுடலு முயிர்தானு நீயன்றோ வென்பொருளை
யெனக்கு வாய்ந்த
மன்னடலே பெரும்பேற்றுக் குணக்குன்றே யடிகளென
வாழ்த்த லன்றிப்
பின்னெதையா னின்றிறத்துச் செய்குவன்கா ணிவ்வுலகிற்
பிறந்தே கற்ற
அன்னபய னீயன்றோ வடைகின்றுய் புகழ்மிக்கோ
யையா வையா.

தம்மையே புகழ்ந்தென்னு முதலதுள திருவருட்பாத்
தன்னைக் கொண்டே
எம்மையோர் தம்மையும்நான் புகழ்ந்கதிலை யிதுகாறு
மின்பே யீது
மெய்ம்மையே நீயெனக்குச் சற்குருவாய் விளங்கலினின்
மீது பாட
அம்மையால் வந்ததன்றே நினக்கியான் கூறலிச்சை
யன்றுன் மாதோ.''

என்பன முதலியன. பாக்களுட் சில விரிவஞ்சி விடப்பட்டன.

1906-ம் ஆண்டில் இவர் தேவகோட்டைச் சைவ சீல ராகிய திருவாளர்கள்: அரு. சோம. சோமசுந்தரச் செட்டியார், மெ. அரு. நா. இராமநாதச்செட்டியார் ஆகிய இருவருடைய பொருளுதவியைப் பெற்றுச் செந்திநாதைய சுவாமி யந்திரசாலை என்னும் பெயரால் ஓர் அச்சியந்திரசாலையை நிறுவித் தாமெழுதிய நீலகண்ட பாஷ்யத் தமிழ் மொழி பெயர்ப்பு, ஸ்ரீ சீகாழிப் பெருவாழ்வின் ஜீவகாருண்ய மாட்சி, வைதிக சுத்தாத்துவித சைவசித்தாந்த தத்துவப்பட விளுவிடை, விவிலிய குற்சிதக்குறிப்பு முதலிய நூல்களை அச்சிட்டு வெளியிட்டார். கோட்டையூரில் வசித்த சந்நியாசியார் ஒருவர், ஆதி சைவகுலத்தில் உதித்தவனது முகத்தைத் தகர்க்கும் கோல் எனப் பொருள்தரும் ''ஆதி சைவ நாமக *கவுலேயக முகபங்க †முற்கரம்'' என்னும் புத்தகவாயிலாகவும், ''தாந்திரீக துண்டகண்டனம்'' என்னும் புத்தகவாயிலாகவும் சிவாகமங்களையும் ஆதி சைவர்களையும் கண்டித்தார். இவர் இவ்விரு நூல்களையும் முறையே, ''வச்சிர தண்டம்'', ''தாந்திரிக துண்ட கண்டன கண்டனம்'' என்னும் இரண்டு நூல்களை எழுதிக் கண்டித்தார். இவர் எழுதிய இவ்விருநூல்களும் 1910-ம் ஆண்டிலே அச்சிடப்பட்டன. இன்னும் இவரியற்றிய ''மகாவுக்கிர வீரபத்திராஸ்திரம்'' என்னும் நூல் சாம்பவ ஸ்ரீ சதாசிவபண்டித சிவாசாரியராலும், ''சிவஞான போத வசனலங்காரதீபம்'', ''தேவாரம் வேதசாரம்'' என்னும் நூல்கள் புரசைச் சுந்தரமுதலியார் புதல்வர் ஏகாம்பரம் முதலியாராலும், ''தத்துவ விளக்கம் மூலமும் உரையும்'' மதுரை ஜில்லாவைச் சேர்ந்த காரைக்குடி ஆ. வி. பழ. சிதம்பரச் செட்டியாராலும், ''சைவ வேதாந்தம்'' என்னும் நூல் மேற்படியூர் முத்த. வெ. வெள்ளைச்செட்டியாராலும் அச்சிடுவிக்கப்பெற்று வெளிவந்தன.

இவ்வாறு சைவத்தொண்டு புரிந்துவந்த இவர் சிலநாட் சுரநோயாற் பீடிக்கப்பட்டிருந்து சென்ற இரத்தாட்சி ஞு வைகாசி மீ உ-ந் வ (15-5-1924) வியாழக்கிழமை பிற்பகல் 3 மணியளவில் சிவசிந்தையோடு தேகவியோகமடைந்தார்.

—ஈழநாட்டுத் தமிழ்ப்புலவர் சரித்திரம்.

* கவுலேயக = குலத்துதித்தவன்
† முற்கரம் = கோல்

தென் அடிப் பனையில் த. சை. [illegible] எழுதி
இரண்டாம் அச்சகத்தில்
இந்நூல் [illegible] அச்சிடப்பட்டது

# உபோற்காதம்

''திகடசக்கரச்செம்முகமைந்துளான்'' என்னுந் தலைக்காப்புமுதல், ''பாராதியேனைப் பொருளாகி'' என்னுங் கடைக்காப்பு இறுதியாகக் கச்சியப்பசிவாசாரியசுவாமிகளால் அருளிச்செய்யப்பட்ட அத்தியற்புத அதிமதுர திவ்விய வாக்காகிய கந்தபுராணத்தினின்று சாரமாகத் திரட்டிச் செய்யப்பட்டமையால், இந்நூலுக்குக் கந்த புராணநவநீதம் என்று பெயர் கொடுக்கப்பட்டது.

எவர்களுக்கும் இயல்பாகவே இனிமைபயக்கும் பால் தேன் சர்க்கரை முதலியவை வாயிலாக வைத்தியன் ஆயுள்வேதப்பிரகாரம் நோயாளிக்கு மருந்து கொடுத்து நோய் நீக்குமாறுபோல, எவர்களுக்கும் இயல்பாகவே இன்பம்பயக்கும் வீரம் பயம் சிருங்காரம் இழிவு புகழ் வியப்பு கருணை நகை உருத்திரம் என்னுங் காவியரசங்கள் வாயிலாகக் கச்சியப்பசிவாசாரியார் பதியிலக்கணமுதலியவைகளை நமது புல்லறிவுநீங்க உபதேசித்தருளினர்.

கந்தபுராணத்துண்மைப்பொருளை ஆராயாதவர்கள் விபரீதார்த்தங்கொண்டு சிவசுப்பிரமணியக்கடவுளை இகழ்ந்து அதிபாதகர்களாகிய சிவத்துரோகிகளாய் எரிவாய் நரகத்துக்கு இரையாகாவண்ணம் புழுத்த நாயினுங்கடையேனுகிய தமியேன் பாருக்குள்ளே கலியுகத்திலே கண் கண்ட பரம தெய்வமாகிய **முருகக்கடவுளுடைய** திருவடித் தாமரைகளைச் சிந்தித்துத் துதித்து வணங்கி, சைவசித்தாந்த சமயத்தின் உயர்வை யுணர்த்துதற்குச் சமயப் பிரகரணத்தை முதற்கண்ணும்; இச்சமயத்திற்குரிய நூல்கள் இவைகள்தாம் என உணர்த்தற்கு வேதாகமப்பிரகரணத்தை இரண்டாவதாகவும்; வேதாகமங்களிலே சொல்லப்பட்ட பொருள்கள் பதி பசு பாசமாமென உணர்த்தற்குப் பதிபசுபாசப்பிரகரணத்தை மூன்ருவதாகவும்; வேதாகமங்களிலே யமைந்த சரியையாதி நிலைகளிலே நின்று சிவபெருமானை வழிபடல்வேண்டுமென்பதை உணர்த்தற்குச் சரியாபாதாதிப்பிரகரணங்களை நான்கு ஐந்து ஆறு ஏழாவதாகவும்; சரியையாதி பாதங்களிலே நின்று உறுதிபெறுதற்கு அன்பு ஒருதலையாக வேண்டப்படுமென்பதை உணர்த்தற்குப் பக்திப்பிரகரணத்தை எட்டாவதாகவும் அமைத்துக் கந்தபுராணநவநீதமென்னும் இச்சிறுநூலை இயற்றினேன்.

குற்ற மேதெரி வார்குறு மாமுனி
சொற்ற பாவினு மோர்குறை சொல்வராற்
கற்றி லாவென் கவிவழு வாயினு
முற்று நாடிவல் லோருய்த் துரைக்கவே.

உ

# திருச்செந்தூர்



மேலைக் கோபுரம், சண்முக விலாசம், கீழைக்கோபுரம், சமுத்திர தீர்த்தம்.

உ
கணபதிதுணை.
திருச்சிற்றம்பலம்.

# கந்தபுராண நவநீதம்

### விநாயகர் காப்பு

திகட சக்கரச் செம்முக மைந்துளான்
சகட சக்கரத் தாமரை நாயக
னகட சக்கர வின்மணி யாவுறை
விகட சக்கரன் மெய்ப்பதம் போற்றுவாம்.

உச்சியின் மகுட மின்ன வொளிர்தர நுதலி னோடை
வச்சிர மருப்பி னெற்றை மணிகொள்கிம் புரிவ யங்க
மெய்ச்செவிக் கவரி தூங்க வேழமா முகங்கொண் டுற்ற
கச்சியின் விகட சக்ர கணபதிக் கன்பு செய்வாம்.

### சுப்பிரமணியர் காப்பு

மூவிரு முகங்கள் போற்றி முகம்பொழி கருணை போற்றி
யேவருந் துதிக்க நின்ற விராறுதோள் போற்றி காஞ்சி
மாவடி வைகுஞ் செவ்வேண் மலரடி போற்றி யன்னுன்
சேவலு மயிலும் போற்றி திருக்கைவேல் போற்றி போற்றி.

### நூற்பயன்

இந்திர ராகிப் பார்மே லின்பமுற் றினிது மேவிச்
சிந்தையி னினைந்த முற்றிச் சிவகதி யதனிற் சேர்வ
ரந்தமி லவுணர் தங்க ளடல்கெட முனிந்த செவ்வேற்
கந்தவேள் புராணந் தன்னைக் காதலித் தோது வோரே.

### வாழ்த்து

வான்முகில் வழாது பெய்க மலிவளஞ் சுரக்க மன்னன்
கோன்முறை யரசு செய்க குறைவிலா துயிர்கள் வாழ்க
நான்மறை யறங்க ளோங்க நற்றவம் வேள்வி மல்க
மேன்மைகொள் சைவ நீதி விளங்குக வுலக மெல்லாம்.

---

முதலாவது

## சமயப்பிரகரணம்

**பு**றப்புறச்சமயமும், புறச்சமயமும், அகப்புறச் சமயமும், அகச்சமயமுமெனச் சமயம் நான்கு வகைப் படும். அவற்றுள், புறப்புறச்சமயம் உலோகாயதம், நால் வகைப் பௌத்தம், ஆருகதமென அறுவகைப்படும். புறச்சமயம் தருக்கம், மீமாஞ்சை, ஏகான்மவாதம், சாங் கியம், யோகம், பாஞ்சராத்திரமென அறுவகைப்படும். அகப்புறச்சமயம் சைவம், பாசுபதம், மகாவிரதம், காளா முகம், வாமம், வைரவமென அறுவகைப்படும். அகச் சமயம் பாடாணவாதசைவம், சங்கிராந்தவாதசைவம், அவிகாரவாதசைவம், பரிணாமவாதசைவம், சுத்தசைவம், பேதவாதசைவம் என அறுவகைப்படும். இந்நால்வகைச் சமயங்களினுந் தலையாய் விளங்குவது, சைவ சித்தாந்த மேயாம்.

### புறச்சமயங்கள்

நன்னல மாதரை நண்ணு மின்பமே
யுன்னரு முத்தியென் றுட்கொள் வார்சில
ரின்னன துறைதொறு மெய்தி யாவருந்
துன்னரும் பிறவியுட் டுன்ப நீங்கலார். 1

அறிந்தறிந் துயிர்தொறு மதுவ தாகியே
பிறந்திறந் துணர்வெலாம் பெற்று நோன்பொடு
துறந்துகொன் றிட்டன துய்த்துக் கந்தமற்
றிறந்திடன் முத்தியா மென்கின் றார்சிலர். 2



பெருமைகொள் குலந்தொறும் பிறந்து செய்திடும்
விரதமுஞ் சீலமும் வினைகண் மாற்றிட
வருகலும் பிரமமா யங்கம் விட்டுயிர்
பரவுதல் வீடெனப் பகரு வார்சிலர். 3

காலமுங் கருமமுங் கடந்த தோர்பொருண்
மூலமுண் டோவென மொழிகின் றார்சிலர்
மேலுமுண் டோசில விளம்ப விஞ்சையின்
பாலுறு முணர்ச்சியே பரமென் பார்சிலர். 4

ஆற்றுறு புனல்படிந் தழுக்கு நீக்கலார்
சேற்றிடை வீழ்ந்தென மறைகள் செப்பிய
நீற்றொடு கண்டிகை நீக்கி வன்மையால்
வீற்றொரு குறிகொடு மேவு வார்சிலர். 5

நின்றன துரிமையை நிகழ்த்தி மேன்மையா
வென்றனை யயன்றனை யெண்ணு வார்சில
ரன்றியு நின்னுட னநேகர் தம்மையு
மொன்றென வேநினைந் துரைக்கின் றார்சிலர். 6

### அகச்சமயம்; சைவசித்தாந்தம்

அறுசம யத்திற் கடந்தசை வத்தி
னன்றிவீ டிலதெனத் தெளிந்து
பிறரறி யாது தொன்மைபோ லிருந்து
பிஞ்ஞகன் மீது கன்மலரா
லெறிதரு தேர ரன்பர்தங் கலிங்க
மெழிலிக ணணைத்தலுஞ் சிரத்தை
முறைபுரி சிலைமேன் மோதினோர் முதலோர்
முத்திபெற் றுடையதம் மூதூர். 7

## புறப்புறச்சமயம்

1. உலோகாயதன்—ஈசன், கன்மம், ஆன்மா என்பன இலவாம், மகளிரிடத்தின்பமொன்றுமே பொருளா மென்பன்.

2. புத்தரிற் சௌத்திராந்திகன்—உருவம், ஞானம், வேதனை, குறிப்பு, வாசனை என்பன தொடர்ச்சியாய் அழிவது பந்தமென்றும், அவைமுற்றும் ஒழிதலே முத்தி யென்றுஞ் சொல்வன்.

3. யோகசாரன்—சௌத்திராந்திகனிற் சிறிதுவேறு பட்டு, அறிவு அருபமென்றும், பிரபஞ்சம் பொய்யென்றுஞ் சொல்வன்.

4. மாத்மீகன்—அறிவும், அறியப்படுபொருளுஞ் சூனியமென்றும், அதனுலே பிரபஞ்சந் தோன்றுதென்றுஞ் சொல்வன்.

5. வைபாடிகன்—மஞ்சளும், சுண்ணும்புங் கூடிய விடத்து, சிவப்பொன்று தோன்றுமாறுபோல, இந்திரியங் கள் கூடியவிடத்துப் பிரபஞ்சந்தோன்று மென்பன்.

6. ஆருகதன்—ஞானவர்ணீயம் முதலிய எண்குணத் தையும்; பசித்தல் முதலிய பதினெண்குணத்தையும், அர சிகம் முதலிய ஆறு குணத்தையும் விடுத்து, முன்னைக் கன்மம் புசித்துத் தொலைந்தவிடமே வீட்டின்பமென்பன்.

---

## புறச்சமயம்

1. தார்க்கிகன்—வித்தியாகற்பனை, தோஷம், பிரவி ருத்தி, சனனம், துக்கமென்பவைகளைத் தனித்தனி நீக்கிச் செல்ல, முடிவினின்ற துக்கம் ஒழியுமென்றும், இதுவே முத்தியென்றுஞ் சொல்வன்.

2. மீமாஞ்சகன்—வேதம் அநாதியென்றும், ஈசனை வேண்டாது கன்மமே பலத்தைக் கொடுக்குமென்றுஞ் சொல்வன்.



3. மாயாவாதி—சுத்தமாகிய பரப்பிரமம் மாயோபாதி யினுலே வாதிக்கப்பட்டுச் சரீரத்தினுள்ளே சீவான்மாவாக நிற்குமென்றும், சீவான்மாவும் விவேகஞானமடைந்து, மாயாவத்தைகடந்து, பரமான்மாவோடு கடாகாயமும் மகா காயமும் போல அபேதமாய்விடுமென்றுஞ் சொல்வன்.

4. சாங்கியன்—புமானுகிய சுத்தபுருடன் அறியாமை யுற்றபோது, பிரபஞ்சமெல்லாந் தானென விரிந்து நிற்ப னென்றும், விவேக ஞானம் எய்தியபோது, அவையெல் லாம் பிரகிருதிக்கே யன்றித் தனக்கில்லையா மென்றுஞ் சொல்வன்.

5. யோகி—நின்மலசத்துவ பரிணுமருபமாகிய சித்த விருத்திகளை உன்முகமாகத் திருப்பி, அவைகளை அவற்றின் முதற் காரணத்திலே ஒடுக்குதலாமென்பன்.

6. பாஞ்சராத்திரி—நாராயணர் தன்னை வழிபட்டவர் களுடைய பந்தத்தை நீக்கி, அவர்களை விரசாநதியிலே மூழ்குவித்துச் சுத்தர்களாக்கி, வைகுண்டத்திலே சாரூபத் தைக் கொடுப்பர் என்பன்.

---

## அகப்புறச்சமயம்

1. சைவன்—சிவன் தாண்டவபூஷணமூர்த்தியாய் அருள்வர் என்பன்.

2. பாசுபதன்—சிவன் விபூதியுஞ் சடையுந்தரித்த மூர்த்தியாய் அருள்வர் என்பன்.

3. மகாவிரதன்—சிவன் என்பு மாலைதரித்தமூர்த்தி யாய் அருள்வர் என்பன்.

4. காளாமுகன்—சிவன் படிகமும் புத்திரதீபமணியுந் தரித்தமூர்த்தியாய் அருள்வர் என்பன்.

5. வாமன்—சிவன் அக்கினியும் உபவீதமுந் தரித்த மூர்த்தியாய் அருள்வர் என்பன்.

6. வைரவன்—சிவன் தமருகமுஞ் சிலம்புந் தரித்த மூர்த்தியாய் அருள்வர் என்பன்.

---

அகச்சமயம்

1. பாடாணவாதசைவன்—ஆன்மா முத்தியிலும் சகசமலம் நீங்காது கல்லுப்போலக் கிடக்குமென்பன்.

2. சங்கிராந்தவாதசைவன்—விகாரமின்றி நிற்கும் ஆன்மசந்நிதியிலே அசத்தாகிய கருவிகளே சத்தாகிய சிவத்தைச் சிவகரணமாய் நின்று அறியுமென்பன்.

3. அவிகாரவாதசைவன்—கடியவெய்யிலிலே நடந்தோரால் அடையப்படுகின்ற மரநீழல் போல, பதி விகாரமின்றிநிற்ப, ஆன்மாவானது தானே பக்குவமடைந்த போது ஞானக்கண்பெற்றுப் பதியைச் சேருமென்பன்

4. பரிணுமவாதசைவன்—உயிர்கெட்டுக் கூடி அரனடியில் ஒன்ருய்ப் போமென்பன்.

5. சுத்தசைவன்—ஆன்மாவுஞ் சிவமுங் கூடியவிடத்து, ஆன்மா சிவானுபவத்துக்கு உரித்தாகாதென்பன்.

6. பேதவாதசைவன்—உயிர் மெய்ஞ்ஞானஞ் சேர்ந்தபோதே மலம் நீங்கப்பெறுமென்றும் இதுவே முத்தியென்றுஞ் சொல்வன்.

ஏகான்மவாதம்—மாயாவாதமும், பாற்கரியவாதமும், கிரீடாப்பிரமவாதமும், சத்தப்பிரமவாதமுமென நான்குவகைப்படும். ஆசீவகன், பாட்டன், பிரபாகரன், துவிதவாதி, சாத்தேயன், காபாலிகன், சூரியவாதி, மிச்சிரவாதி, கருமவாதி, சிவசமவாதி முதலாய சமயிகள் சிறிது சிறிது வேறு பாட்டோடு புறப்புறம், புறம், அகப்புறம், அகம் என்னும் நாற்கூற்றுச் சமயங்களுள்ளே அடங்கி விடுவர்.

உலோகாயதன்—பிருதுவி, அப்பு, தேயு, வாயு தத்துவங்களிலும்; ஆருகதன் குணதத்துவத்திலும்; பௌத்தன்—புத்திதத்துவத்திலும்; சாங்கியன்—பிரகிருதி தத்துவத்திலும்; மாயாவாதி—புருடதத்துவத்திலும்; காபாலிகன்—காலதத்துவத்திலும்; மகாவிரதன் வித்தியா தத்துவத்திலுமாகப் பொருந்துவர்.



உலோகாயதம்முதல் ஐக்கியவாதம் ஈருயுள்ள புறப்புறச்சமயமும், புறச்சமயமும், அகப்புறச்சமயமும் என்னும் மூவகைச்சமயத் தெய்வங்கள் எல்லாம் பூதமுதல் அசுத்த மாயாதத்துவம் இறுதியாயுள்ள ஒவ்வோர்தத்துவங்களிலே நிலைபெறும். அகச்சமயத் தெய்வமாய்நின்ற அதிகார போக இலய சிவபேதங்கள் சுத்தவித்தை முதலாய ஐந்து தத்துவங்களுள் ஒவ்வொன்றிலே நிலைபெறும். அவ்வத்தெய்ங்கள் நிலைபெறுந் தத்துவமே அவ்வச்சமயங்களுக்கு முத்தி நிலையாகும்.

மனேவிகற்பங்களையொழித்து, ஆன்மா முப்பத்தாறு தத்துவங்களுக்குமேலே தன்னுண்மை அறிந்து சீவன்முத்தனுய், அகம் புறம் எங்கும் வியாபித்துச் சிவதருமதருமியாய், சிவதருமமெனப்பட்ட முற்றுணர்வு, வரம்பிலின்பம், அநாதிபோதம், பேரருள், அளவிலாற்றல், தன்வயம், இயற்கையுணர்வு, தூயமேனி என்னும் எண்குணங்களுமுடையனுய், சிவத்துவத்தைப் பெற்றுச் சிருட்டிப்படும் தன்மைமுதலியனவின்றிச் சிவசமமாதலாகிய உண்மைமுத்தியை உணர்த்துவது சைவசித்தாந்த சமயமேயாம். காஞ்சிப்புராணம் ''பேயன்ன புறச்சமயப் பிணக்குநூல் வழியனைத்தும்பிழையேயன்றி, வாயன்மை தெளிந்துசைவ சித்தாந்த வழிதேறி யதீத வாழ்விற், போயஞ்மி யஞ்செழுத்துந் திருநீறுங் கண்டிகையும் பொருளாக் கொண்ட, நாயன்மார் திருக்கூட்டம் பணிந்திறைஞ்சும் பெரும்வாழ்வு நான்பெற் றேனல்.'' தாயுமானவர்:- ''சைவ சமய மேசமயஞ் சமயா தீதப் பழம்பொருளைக், கைவந் திடவே மன்றுள்வெளி காட்டு மிந்தக் கருத்தைவிட்டுப், பொய்வந் துழலுஞ் சமயநெறி புகுத வேண்டா முத்தி தருந், தெய்வ சபையைக் காண்பதற்குச் சேர வாருஞ் செகத்தீரே.'' ''காக முறவு கலந்துண்ணக் கண்டீ ரகண்டா காரசிவ, போக மெனும்பே ரின்பவெள்ளம் பொங்கித் ததும்பிப் பூரணமா, யேகவுருவாய்க் கிடக்குதையோ வின்புற் றிடநா மினியெடுத்த, தேகம் விழுமுன் புசிப்பதற்குச் சேர வாருஞ் செகத்தீரே.''

☞ கந்தபுராணத்திலே இரண்டு சகோதரஞானிகள் கதை சொல்லப்படுகின்றது. ஓர்ஞானி தமையன்; மற்றவன் தம்பி. தமையன் பிரமமொன்ருெழிந்து மற்றெல்லாம் பொய்யென்றும், தம்பி உலகமொன்ருெழிந்து மற்றெல் லாம் பொய்யென்றும், கோடலினுல் அவ்விருவர்க்கும் எவர்களாலும் விரும்பற்பாலனவாகிய இரக்கம் வாய்மை கொடை முதலிய புண்ணியங்களிலே விருப்புமில்லை; கொலை செய்தல் களவெடுத்தல் கள்ளுணல் மாமிசம் புசித்தல் பொய்ச்சாட்சி சொல்லல் பிறன்மனைவிழைதல் வரைவின்மக ளிர் விழைதல் முதலிய பாவங்களிலே வெறுப்பு மில்லை. அவ்விருவர்க்கும் கீழும் மேலும் பொய்யாதலினுல் நாட வேண்டியதோர் பொருளுமில்லை; ஆசாரமாயிருக்கவேண்டு மென்றேனும், தவஞ்செய்யவேண்டுமென்றேனும், விரதங் கள் அனுட்டிக்கவேண்டுமென்றேனும், பிரமசரியம் முதலிய நிலைகளின் நிற்கவேண்டுமென்றேனும், சிவனுடைய உருவத் திருமேனியைத்தியானிக்க வேண்டுமென்றேனும், சித்தமல மறுத்தல் வேண்டுமென்றேனும், மனசை விடையங்களின் வழியே செல்லாது தடுத்தல் வேண்டுமென்றேனும், கருத்து நிகழாமையினுலே தமையன் ஞானியும் தம்பிஞானியும் ஒப்பாவார். தமையன்ஞானி மாயாவாதி; தம்பிஞானி உலோகாயதன். மாயாவாதி பசுஞானி, ஆன்மாப்பிரம மென நிற்றலால்; உலோகாயதன் பாசஞானி, ஆன்மா உலகமென நிற்றலால். பசுஞானி புறச்சமயி; பாசஞானி புறப்புறச்சமயி. பசுஞானம் அசுரனுக்கு அசுரகுருவாகிய சுக்கிரனுல் உபதேசிக்கப்பட்டது; பாசஞானம் சுரனுக்குச் சுரகுருவாகிய பிரகஸ்பதியால் உப தேசிக்கப்பட்டது; பசுஞானம் சுக்கிரனுபதேசப் படலத்தினுலே பெறப்படும்; பாசஞானம் இந்திரபுரிப்படலத்தினுலே பெறப்படும். இவ்விருஞானமும் இவ்விருதிறத்தார்க்கும் இவ்விருகுரவராலும் பக்குவநிலைக்கியையப் போதிக்கப்பட் டன. சிவமந்திரம் அசுரனுக்கு உபதேசிக்கப்பட்டபோது அவனுக்குப் ''பொய் கொலை களவு காமம் புன்மைகளு ருமே போற்றிச் செய்குதிதவத்தை'' என்றும், அவனுக்கே



பின்னர் பசுஞானம் உபதேசிக்கப்பட்டபோது ''கொலை யொடு களவு காமங் குறித்திடு வஞ்ச மெல்லா நிலையெனப் புரிதி'' என்றும் சுக்கிரன் உரைத்தமையால் சமயதீக்ஷை விசேஷதீக்ஷை நிருவாணதீக்ஷை பெற்றுச் சிவபெருமானு டைய ஞானனந்தவடிவாகிய திருவடியை நாடிநிற்கும் மெய்யன்பர்களாகிய சைவர்களுக்கு மாயாவாதநெறியும் அந்நெறியைப் போதிக்கும் ஞானவாசிட்டம், வாசுதேவ மனனம், பஞ்சதசப்பிரகரணம், தத்துவராயர் பாடல் முதலியனவும் வேண்டப்படாமைபெறப்படுகின்றது; இந்திர னுக்குப் பிரகஸ்பதி உபதேசித்த உலோகாயதமும் பொய் யாமென்பது ''புன்ருெழி லாகிய பொய்யும் வாய்மையா- மொன்ருெரு பெரும்பய னுதவு மாயிடின்'' என்று இந்திரபு ரிப்படலத்திற் கூறப்பட்டமையினுலே பெறப்படுகின்றது. படவே, இவ்விருசமயங்களும் கந்தபுராணத்தினுலே கண் டிக்கப்பட்டமை காண்க.

---

இரண்டாவது

## வேதாகமப் பிரகரணம்

### பிரணவம்

**பி**ரணவமானது மூலமொழி எனவுந், தனிமொழி எனவும், ஓங்காரம் எனவும், குடிலை எனவும்படும். அது சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் பீடமாயும், மற்றைத் தேவர்களுக்கெல்லாம் பிறப்பிடமாயும், எல்லா மந்திரங்களுக்கும் வேதங்களுக்கும் மூலமாயும், காசியில் இறப்பவருக்கு எம்பெருமான் உபதேசித்தருளுந் தாரகப்பிரமமாயும் உள்ளது. சிவன் ஓங்கார மூலப் பொருளெனப் படுவர். பிரணவம் வலம்புரிச்சங்கு வடிவினது.

மேலினி யணைய செவ்வேள் விரிஞ்சனைச் சுருதிக் கெல்லா
மூலம தாகி நின்ற மொழிப்பொருள் வினவி யன்னுன்
மாலுறச் சென்னி தாக்கி வன்சிறைப் படுத்தித் தானே
ஞாலமன் னுயிரை யெல்லா நல்கியே நண்ணும் பன்னுள். 1

என்று நான்முக னிசைத்தலு மவற்றினு ளிருக்கா
மொன்று நீவிளம் புதியென முருகவே ளுரைப்ப
நன்றெ னுமறை யெவற்றிற்கு மாதியி னவில்வா
னின்ற தோர்தனி மொழியைமுன் னேதின னெறியால். 2

தாம ரைத்தலை யிருந்தவன் குடிலைமுன் சாற்றி
மாம றைத்தலை யெடுத்தனன் பகர்தலும் வரம்பில்
காமர் பெற்றுடைக் குமரவே ணிற்றிமுன் கழறு
மோமெ னப்படு மொழிப்பொரு ளியம்புகென் றுரைத்தான். 3

ஈசன் மேவரு பீடமா யேனையோர் தோற்றும்
வாச மாயெலா வெழுத்திற்கு மறைகட்கு முதலாய்க்



காசி தன்னிடை முடிபவர்க் கெம்பிரான் கழறு
மாசி லுரகப் பிரமமா மதன்பய னுய்ந்தான். 4

தூம மறைக்கெலா மாதியு மந்தமுஞ் சொல்லு
மோமெ னப்படு மோரெழுத் துண்மையை யுணரான்
மாம லர்ப்பெருங் கடவுளு மங்கிறு னென்று
னுமி னிச்சில வறிந்தன மென்பது நகையே. 5

ஆல மேபுரை நிறத்ததா யமிழ்தினுஞ் சுவைத்தாய்
ஞால மார்தர வொழுகிய காளிந்தி நதிபோய்
மூல மெய்யெழுத் தன்னதோர் முதுவலம் புரியின்
கோல மாகிநோற் றிருத்தியா லுலகருள் குறிப்பால். 6

ஆதி தேவனை யொருவியே புடவியி லணுகி
யோத வேலையை மாறுகொள் காளிந்தி யுழிப்போய்
வேத மூலநேர் வால்வளை யுருக்கொடு விளங்கி
யேத மில்லதோர் பதுமபீ டத்தின்மே லிருந்தாள். 7

பிரணவம் சமஷ்டிப் பிரணவம் வியஷ்டிப் பிரணவம் எனவிருவகைப்படும். சமஷ்டிப்பிரணவம் 'ஓம்' காரம் என நிற்பது; வியஷ்டிப்பிரணவம் அகார உகார மகாரமென நிற்பது. சமஷ்டி தொகுத்துச் சொல்வது, தோட்டமென்பதுபோல; வியஷ்டி பகுத்துச் சொல்வது, வாழை கமுகு என்பனபோல.

அகார உகார மகாரமென்னும் மூன்றும் முறையே இறந்தகால நிகழ்கால எதிர்காலங்களையும்; சாத்துவிக இராசச தாமச குணங்களையும்; பிரம விஷ்ணு உருத்திரர்களையும்; சிருஷ்டி திதி சங்காரகிருத்தியங்களையும்; காருகபத்திய தக்ஷிண ஆகவநீயாக்கினிகளையும்; இருக்கு யசுர் சாம வேதங்களையும் உணர்த்துமென்க.

ஆதியிருக்குவேதத்தின், ஆதிமண்டலத்தின், ஆதிய நுவாகத்தின், ஆதிமந்திரத்தின், ஆதிபதமாகிய ''அக்கினி'' யின் ஆதியிலும்; மீமாஞ்சை, நியாயம், வைசேஷிகம், சாங்கியம், யோகம், வேதாந்தம் முதலாய வைதிக சாஸ்திரங்களின் ஆதிசூத்திரங்களின் ஆதிபதமாகிய 'அத' வின் ஆதியினும்; ஆதிவியஷ்டிப் பிரணவமாகிய ''அ'' காரம் விளங்குகின்றது.

தேவாரம் முதல் பெரியபுராணம் இறுதியாயுள்ள பன்னிரண்டு திருமுறைகளின் முதலினும் இறுதியினும் முறையே போந்த ''தோடுடைய செவியன்'' ''நின்ற தெங்கு நிலவி யுலகெலாம்'' என்பவைகளின் ஆதியினும் அந்தத்தினுமமைந்த ஓகார மகாரங்கள் புணர்ந்து, ஓமென முடிந்து, திருமுறைகளின் பொருள் ஓங்காரப்பொருளாகிய சிவபெருமான் என்றுணர்த்தின.

பிரணவமானது வேதகோஷத்துக்கு முன்னும் பின்னும் உச்சரிக்கப்படுகின்றது.

வியஷ்டிப்பிரணவமாகிய நாத, விந்து, மகார, உகார, அகாரங்களைப் பற்றுக்கோடாகக்கொண்டு, அதிசூக்குமை, சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி என்னும் வாக்குக்கள் தோற்றி ஒடுங்குமாமென ஆகமங்கள் செப்பும்.

பிரணவம் உத்கீதையெனவும், சுத்தமாயையெனவும் படும். சுத்தமாயையைத் தன்னியல்பால் இனிது உள்ள படி காணப்பெறுவோர் அபரமுத்திப் பெரும்போகத்தைப் பெறுவர்; இதற்கு மேலாகிய பேரறிவு ஒருவனுக்கு விளங் குமாயின், அவன் அப்பொழுதே பரமுத்தியைத் தலைப் படுவன்.

துவாதசாந்தத்திலே சர்வேசுரரும், ஓங்காரவாச்சிய ருமாயுள்ள சிவபெருமான், நாபியினும் இருதயத்தினும் புருவ மத்தியினும் முறையேயுள்ள அகார உகார மகார வாச்சியராகிய பிரம விஷ்ணு உருத்திரரை அதிட்டித்து நிற்பர் என்க.



அசுத்தமாயைக்குக் கீழே பிரம விஷ்ணுக்களுக்குத் தோற்றங் கேட்கப்படுதலானும், அசுத்தமாயையினுமுய ர்ந்த சுத்தமாயைக்கு மேலே சிவபெருமானுக்கு வியாபகஞ் செப்பப்படுதலானும், பிரணவம் மற்றைத்தேவர்களுக்குப் பிறப்பிடமும், சிவபெருமானொருவருக்கே இருப்பிடமுமா யிற்று.

பிரணவம் அகாரமாய் வாய்திறத்தலினலாகி, உகார மாய் இதழ்குவிதலினலே நின்று, மகாரமாய் ஒடுங்கி நின்ற மையால், எல்லாவுலகங்களும், எல்லாச்சுருதிகளும் அப் பிரணவத்திலே தோன்றி நின்று ஒடுங்குமென்பது துணி யப்படும்.

''அ'' என்பது சம்ஸ்கிருத திராவிட பாஷைகளுக் கன்றி, உலகத்துள்ள மற்றெவ்வெவ் மிலேச்ச பாஷைகளுக் கும் முதலிலேயமைந்தது. ஓமென்பது ஆமென் எனத் திரிந்து பிறசமயிகளுடைய செப நிவேதனங்களினும் காணப்படுகின்றமையினலே ''சமயகோ டிகளெலாந் தந் தெய்வமெந்தெய்வமென் றெங்குந் தொடர்ந்தெதிர் வழக் கிடவு நின்ற'' ஓங்காரப் பொருளாகிய பரமசிவக் கடவு ளுடைய மிகவோங்கிய பிரபாவம் பிரகாசிக்கின்றது. புறச் சமயங்களுள்ளே காணப்படும் ஒவ்வோர் உண்மைத் தரு மங்களைக்கொண்டு அவ்வச்சமயங்களெல்லாம் மெய்யென் பது, யானையின் காலையும், வாலையும், காதையும், கையை யும் தனித்தனி தடவிய ஒவ்வோர் முழுக்குருடரும் அந்த யானையை முறையே உரலென்றும், துடைப்பமென்றும், முறமென்றும், உலக்கையென்றுஞ் சாதிக்கத்துணிந்த குளறு படைபோலாம்; சைவசித்தாந்தி ஒருவனே அவ்வியானை யினுறுப்புக்கள் முழுதையும் அறிந்து, அக்குளறுபடைக ளுக்குச் சமாதானஞ் செய்யவல்ல கண்ணுடையானொருவன் போலாம். சிவதருமோத்தரம்:—''ஓமென்னும் பதமதனில் வேதமாதி யுற்பவிக்கு மாலவித்தினுதிக்குமாபோல், ஓமென் னும் பதமதனை யுரைத்தார்தாமே யோதினர்கள் வேதாதி யுரைகளெல்லா, மோமென்னும் பதப்பொருளை யுணர்ந்

தார்தாமே யுணர்ந்தாரும் வேதாதி யொருமைகூர, வோமென்னும் பதமொழித்தஞ் செழுத்துமாதர்க் கொழுங் குடைய சூத்திரர்க்கு முரைக்கலாமே.''

---

## வேதாகமோற்பத்தி

சிவபெருமானிலிருந்தே வேத சிவாகமங்கள் பிறந்தன.

உன்ளிடைப் பிறந்த வேத முன்பெரு நிலைமை தன்னை
யின்னதென் றுணர்ந்த தில்லை யாமுனை யறிவ தெங்ங
னன்னையும் பயந்தோன் ருனு மாயினை யதனுன் மைந்தர்
பன்னிய புகழ்ச்சி யாவும் பரிவுடன் கேட்டி போலாம். 1

ஏற்றம தாகிய மறைக்கும் யாமுனஞ்
சாற்றிய வாகமந் தனக்கு மாங்கது
வீற்றுற வருவது மன்று மேன்மையா
லாற்றவு நமதிய லறையு நீரதே. 2

ஆனதன் னியற்கைக ளனைத்துங் கண்ணுதல்
வானவ னுகம மறையின் வாய்மையான்
மேனிகழ் தொகைவகை விரிய தாகவே
தானருள் புரிந்தனன் றலைவி கேட்கவே. 3

வேதமே முதலா வுள்ள வியன்கலை யனைத்துந் தொன்னு
ளோதின னவனே யெங்கட் குரைத்திட வுணர்ந்தா மன்றே
யீதுநீ யவற்றிற் காண்டி யாருமொன் ருகக் கொண்டாய்
பேதையோ பெரிது மென்னப் பிதாமக னினைய சொற்ருன். 4

''ஆப்தர் உள்ளது கூறுவோர். சாமானியமனுடரினும் விசேடமனுடர் மேலாகிய ஆப்தர்; அவரினும் இருடிகள் மேலாகிய ஆப்தர்; அவரினுந் தேவர்கள் மேலாகிய ஆப்தர்; அவரினும் பிரமா மேலாகிய ஆப்தர்; அவரினும் விஷ்ணு மேலாகிய ஆப்தர்; அவரினும் உருத்திரர் மேலாகிய ஆப்தர்; அவரினும் மகேசுரர் மேலாகிய ஆப்தர்; அவரினுஞ் சதாசிவர் மேலாகிய ஆப்தர்; அவரினும் மேலாகிய ஆப்தர் இன்மையால் அவரே அதிபரமாப்தர் எனப்படுவர்'' இந்த அதிபரமாப்தராய், பஞ்சமந்திர சரீரியாயுள்ள சதாசிவநாயனுராலே பிரதம மகாசிருட்டி ஆரம்பத்திலே ஆன்மாக்கள் பொருட்டு அருளிச்செய்யப் பட்ட சுருதியும், அதிபாரமார்த்திக வாக்கியமாகிய சுவதந் திரப்பிரமாணமாகும். முற்றறிவு முற்றுத் தொழிலுடைய சிவபெருமான் சிறிதும் பிரயத்தனமில்லாமலும், ஆயாச மில்லாமலுஞ் சுருதியை அருளிச்செய்தார் என்பது தோன்ற, பிரகதாரணியோபநிடதம் இருக்காதிகளைப் பிரமத்தினது சுவாசம் என்று கூறிற்று. இந்தச் சுருதி சாமாணியசுருதி விசேஷசுருதி என இருதிறப்படும். சாமாணியசுருதி வேதம்; விசேஷசுருதி ஆகமம்.



பரப்பிரமத்தினின்றுந் தோன்றி இருக்கு யசுர் சாமம் அதர்வம் பிரகாசிக்கின்றன என்று யசுர்வேதத்திலே முப்பத் தோராம் அத்தியாயத்திலே ஏழாம் மந்திரஞ் செப்புகின் றது. உண்மைப்பொருள்களைக் கேட்டற்குக் கருவியாதலி ஞலே சுருதியெனவும், உண்மைப்பொருள்களை முற்றும் உணர்தற்கும், வருவித்தற்குங் கருவி யாதலினுலே, ஆகமம் எனவும், நியதமாக உணர்தற்குக் கருவியாதலினுலே நிகமம் எனவும், ஆதிகுருவினின்றுந் தொடங்கிப் பாரம் பரியமாகப் பயிலப்படுதலினுலும், கற்கப்படுதலினுலும், ஆமிநாயமெனவும், சுயம்புவாகிய பதியினின்று தோன்றின மையால் சுயம்பு எனவும், வேதஞ் சொல்லப்படும்; வேதம் என்னுஞ் சொல் அறிதற்குக் கருவியெனப் பொருள்படும். இவ்வேதத்துக்கு அங்கங்கள் சிக்ஷை, வியாகரணம், நிருத் தம், சோதிடம், கற்பம், சந்தோவிசிதி என ஆறும். அவற்றுள், ''சிட்சையாவது வேதத்தின் உச்சாரண லக்ஷ ணத்தை உணர்த்துவதாம். வியாகரணமாவது வேதத்தின் பதலக்ஷணத்தை விவரிப்பதாம். நிருத்தமாவது வேதத்தின் பதங்களுக்கு விவரணங்கூறுவதாம் சோதிடமாவது லக்கி னம், திதி, வாரம், நட்சத்திரம், யோகம், கரணம்முதலிய

